22nd April 1960]

### *Change of Caste Names of villages*

* 797 *Q.*—SRI P. S. SANTHANAM : கனம் ரெவின்யூ அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதில் அளிப்பாரா—

(அ) ஜாதியை ஒழித்து ஒன்றே குலம் என்ற நமது சர்க்கார் ஜாதியின் பெயரால் இருக்கக்கூடிய கிராமத்தின் பெயர்களை மாற்ற உத்தேசித்துள்ளதா?

(ஆ) அப்படியானால் வட ஆற்காடு, திருவண்ணாமலை தாலூகாவில் உள்ள கீழ் குறிப்பிட்ட ஊர்களின் பெயர்களை மாற்ற உத்தேசித்திருக் கிறதா ?

(1) பறையன்பட்டு ; (2) பாப்பானபட்டி ; (3) சாணார்பாளையம் ; (4) ஒட்டன் குடிசை ; (5) இடையன் பாளையம்.

THE HON. SRI M. A. MANICKAVELU : (அ) There is no proposal as such, Sir.

(ஆ) The question does not arise.

SRI P. S. SANTHANAM : இம்மாதிரி சில கிராமங்களின் பெயர்கள் ஜாதியின் பெயரால் இருப்பதால் அவல நிலையை ஏற்படுத்துவதாக இருக்கிறது என்பதை மராமத்து அமைச்சர் அவர்கள் உணர்ந்து சென்ற சில மாதங்களுக்கு முன்னால் மதுரையின் பக்கத்தில் உள்ள சக்கிலி பாளையம் என்பதை மாற்றியிருக்கிறார். அப்படி மாற்றியிருப்பதைப் போல் அம்மாதிரி ஜாதியின் பேரால் இருக்கும் கிராமங்களை நோடிபை செய்து அங்குள்ள தலைவரின் பெயரில் கிராமப்பெயரை மாற்றியமைக்க சர்க்காருக்கு உத்தேசம் உண்டா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : அங்கங்கே யிருக்கும் பொது மக்கள் அதை மாற்றியமைக்கவேண்டுமென்று முன்வந்தால் அதைப் பற்றி யோசிக்கலாம்.

SRI K. VINAYAKAM : இந்தக் கேள்விக்குப் பதில் சொல்கிற மந்திரி அவர்கள் தன்னுடைய ஜாதிப் பெயரை வேண்டா மென்று சொல்லி வெட்டி விட்ட பிறகு, கிராமத்திற்கு ஜாதிப் பெயர் இருக்க வேண்டுமா ? அதை மறுபடியும் அரசாங்கத்தின் மூலமாக பரிசீலனை செய்து, இந்த ஜாதிப் பெயர்களை நீக்கிவிடுவதற்கு அமைச்சர் அவர்கள் நேரடியாக சொந்த ஹோதாவிலே ஏதாவது முயற்சி செய்வார்களா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : அமைச்சர் எந்தக் கிராமத் திலிருந்து வருகிறாரோ அந்தக் கிராமத்திற்கு இம்மாதிரி ஜாதிப் பெயர் இல்லை. (சிரிப்பு.) மற்ற கிராமங்களில் அம்மாதிரி இருந்தால், அங்கு இருப்பவர்கள் அதைப் பற்றிப் பிரயத்தனம் எடுத்துக்கொள்ளலாம்.

MR. SPEAKER : Questions are over.

[*Note*—An asterisk (*) at the commencement of a speech indicates revision by the Member.]

## II. CALLING ATTENTION TO THE COERCIVE STEPS TAKEN TO COLLECT ARREARS OF LOAN AND INAM ASSESSMENT IN TANJORE DISTRICT.

MR. SPEAKER : The Hon. Member, Sri R. Swaminatha Merkondar will now call the attention of the Hon. the Minister for Revenue to a matter of urgent public importance, viz., the serious situation arising out of the coercive steps taken by the Revenue Department in the matter of collecting loans arrears and accumulated assessment of inam lands in Tanjore, Pattukottai, Orthanad and Arantangi taluks. 9-30 a.m.